உ

சிவமயம்.

# உண்மை நோக்கம்.



கோட்டையூர்-அளகாபுரி சிவஸ்ரீ அ. சுப்பிரமணிய சிவாசாரியா ரவர்கள்.

———o———

சிவநெறித் தில்லைவாழந்தணர் தொண்டரென்பார் ஒருவரால் சிதம்பர சிவாலயம் என்னும் ஒரு புஸ்தகம் விபவ-௵ மார்கழி மாதத்து வந்தது. இதனைப் பெரும்பாலும் தழுவியும், சிறுபான்மை மறுத்தும், சிதம்பர சிவாலய விமர்ஷம் என்னும் பத்திரிகை தீக்ஷித மகாசன சமுதாய சபைக் காரியதரிசிகளால் ௸ பங்குனி மாதத்து வந்தது. இரண்டும் பார்த்தேன்.

தொண்டர், வைதிகசிவாகம விதிப்படி சிதம்பர சிவாலய நித்திய பூஜாதிகள், வியாக்கிரபாதர், பதஞ்சலி பகவான் முதலியோரால் ஆதிதொட்டு நடந்து வந்தனவென்று, சிதம்பர மான்மிய சுலோகங்கள் பற்பல காட்டி, அவ்வாறே நடந்து வரும்படி ஸ்ரீமந் நடேசப் பெருமானைப் பிரார்த்தித்துக் கொண்டு, இப்போதுள்ள தீக்ஷித சமூகத்தையும் வேண்டி, அச்சமூகப் பெருமைகள் பற்பல உள்ளனவாகப் புகழ்ந்து பாராட்டிச், சிவாலயங்களுக்கு இன்றியமையாத கர்ஷணாதிப் பிரதிஷ்டாந்தம், பிரதிஷ்டாதி உற்சவாந்தம், உற்சவாதி பிராயச் சித்தாந்தமாகிய விதிக் கிரமங்கள், சிவாகமங்களிலன்றி வேதங்களில் இல்லையாதலால், அவ்விதிக் கிரமங்கள் கூறும் சிவாகம விதிப்படியே ௸ நித்திய பூஜாதிகள் நடத்தலே முறையாமென்று விளக்குகின்றார்.

காரியதரிசிகள், தங்களைப் புகழ்ந்து பாராட்டிய விஷயத்தில் மிக மகிழ்கின்றோமென்றும், சிதம்பர மான்மிய சுலோகார்த்தங்களை நன்கு கவனிக்காத விஷயத்தில் கொஞ்சம் விசனிக்கிறோமென்றும், ஏனென்றால் அச்சுலோகங்களால், தில்லைவாழந்தணர்கள் சிவதீக்ஷை பெற்றவர்களென்ற அர்த்தம் விளங்காதென்றும், வேத சிவாகமங்களை நன்குணர்ந்தவர்க

ளென்பதும் சிவாகமங்களில் விசேஷ அபிமானமுடைய ரென்பதுந் தான் விளங்குமென்றும், அபிமான மிருப்பதற்காக அவ் வாகமங் கூறும் சிவதீக்ஷை முதலியவைகளை அநுட்டிக்க வேண்டிய அவசியமில்லை என்றும், கர்ஷணாதி விதிக்கிரமங்கள் வேதத்திலு முள்ளனவே என்றும், அக்கிரமங்களைச் சிதம்பர தத்துவ நிர்ணயம் என்னும் புஸ்தகம் பார்த்தால் விளங்கும் என்றும், அது வேண்டுமானால் அனுப்பலாமென்றும், அநாதி தொட்டு நடந்து வந்த சிதம்பர சிவாலய பூஜாவிதானத்தை ஒருவர் மாற்றுவது அசாத்தியமென்றும், தொண்டர் தமது பேர் தெரிவிக்காவிட்டாலும், போஸ்டுமூலங் கேட்டால் திருப்திகரமான சமாதானங் கூறலாமென்றும், மேலும் பல கூறி ஸ்ரீ நடராஜப் பிரசாதத்தை அடையவேண்டுமென்ற எண்ணத்தால் இது எழுதலாயிற்று என்று விளக்குகின்றார்கள்.

இத்தனை ஆதரவுடன் பரம சாந்தர்களாய் எழுதிய தீக்ஷித சமுதாயசபைக் காரியதரிசிகளுக்குத் தொண்டர், தமது பேர் தெரிவித்து மகிழ்விக்க வேண்டியது அவசியமே. அவ்வாறு செய்யாத காரணம் தெரியவில்லை. நான் ஒன்றை நினைக்கின்றேன். அது யாதென்றால் சில கால முன்னர், ஆறுமுக நாவலரவர்கள், சிதம்பர சிவாலய நித்திய பூஜாதிகள் சிவாகம விதிப்படி நடத்தவே முறை என்று அதற்குரிய நூற் பிரமாணங்கள் காட்டிப் பத்திரிகை மூலம் விளக்கியபோது, ஷை தீக்ஷிதர்களிற் சிலர், நாவலரவர்களைப் பலவாறு நிந்தித்து, ஒரு சமயத்தில், பிராமணர்களாகிய எங்களுக்குச் சூத்திரனாகிய நீயா விதி சொல்லுகிறவனென்று கடிந்து கூறி நெருங்கினரென்றும், அந்தச் சமயத்திலும் நாவலரவர்கள், எனது செயல் வகைகளால் என்னைச் சற்பிராமணனென்றும், நீங்கள் செய்யுமிச் செயல் வகைகளால் உங்களை இச் செயற் குரியாரென்றும் நிச்சயிப்பேனென்று கூறித், திருவருள் வலியால் அடி படாது தப்பி வந்தனரென்றும், பின்பு பல கேசுகள் தொடுத்துக் கோர்ட்டில் வழக்காடினரென்றும் கர்ண பரம்பரையாக் கேள்விப் படுகிறபடியால், பிறரெவர் தயவும் வேண்டாது சிவனருள் ஒன்றையே பற்றி நின்று, சைவநெறியே வளர்த்து வந்த மகா வீரராகிய நாவலரவர்கட்கே இப்படியானால் நமக்கு எப்படியாமோ வென்று பயந்து தான் தொண்டர், தமது பெயர் காட்டாது மறைந்து நிற்கின்றனர்போலு மென்பதே. மேற்கூறியபடி சில தீக்ஷிதர்கள் நாவலரவர்களைக் கடிந்து கூறி நெருங்கினது முதலிய விஷயங்களைப், பின்னர் ஷை நாவலரவர்களிடமே நேராகவும், அந்தச் சமயம் அவர்களுடன் வந்த இளைய தம்பி வாத்தியாரிடமாகவும் தெரிந்தவர்

கள் இப்போதும் வயோதிகர்களாயிருந்து உண்மை கூறுகின்றார்கள்.

இது, அக்காலத்து நடந்தது. இப்போதுள்ள தீக்ஷித சமூகத்தைத் தொண்டர், முன்னையோர் போல நினைப்பது பொருந்தாது. இவர்களோ, சிற்சபேச தெரிசனத்துக்கு வருவாரைச் சாந்தகுண சீலர்களா யுபசரிக்கின்றவர்களே. எல்லாரும் சாந்தரோவெனில்? சிலர் கடுங்குணமுளராயினும் அவர்களும் பல நயம் நோக்கி உபசரிக்கின்றவர்களே. ஒருவாறு யாராவது மாறுபட்டு நிந்தனை முதலியன செய்வரேல், அது, பிறர்சொல் மூலம் பத்திரிகை மூலம் கோர்ட்டு மூலமாக வெளிவந்து தீமை விளைக்கு மென்பதை அவரறியாரல்லர். ஆதலால் தீக்ஷித சமூகத்தாரெல்லாரும் சிற் சபைக்கு வருவார் யாவரையும் உபசரிக்கின்றவர்களே. இதனைத் தொண்டர் நன்குணர்ந்து வெளிவந்து சந்தேகமிருந்தால் நேரே கேட்டுத் தெரிந்துகொள்ளலாம். அது அவர் கருத்தின்படி ஆகுக.

காரியதரிசிகள், சிதம்பர மான்மிய சுலோகார்த்தங்களைத் தொண்டர் கவனிக்கவில்லை என்றுமாத்திரங் கூறியதனால் யாருக்கு யாது விளங்கும். இன்ன வாக்கியார்த்தம் இன்னதாயிருக்க, அதைத் தொண்டர் மாற்றி இன்ன விதமாக எழுதினரென்று விளங்க எழுதினால், அவ் விருவகை அர்த்தங்களில், இது சரி இது தவறு என்பதை நடு நிலை நிற்கும் அறிஞர்கள் கூறுவார்கள். காரியதரிசிகள் அப்படி எழுதாமல் விளக்கமின்றி எழுதியது, அதனை உள்ளிட்டு நோக்க அவகாச மில்லாத சிலர், தொண்டர் எழுதியது தவறா யிருக்கலாமென்று ஒதுக்கிவிட்டுத், தங்கள் எழுத்தை உண்மை என நம்பித் தங்களுடன் ஒத்து நிற்கக் கருதியேபோலும். அஃதிருக்கட்டும்.

தொண்டர் சிவாகம விதிப்படியே வியாக்கிரபாதர் முதலியோர் சிதம்பர சிவாலய நித்திய பூஜாதிகள் நடத்திவந்தார்களென்று எடுத்துக் காட்டிய சிதம்பரமான்மிய சுலோகங்கள் பலவற்றில் முதலிலுள்ள ௯ அத்தியாயம் ௧௨. ௧௩. சுலோகங்களால், பூசனைக்குப் புஷ்பம் எடுக்கத் தொடங்கும்போதே சிவாகம விதிப்படி செய்தனரென்று எழுதியதில் என்ன தவறுள்ளது. அச்சுலோகங்களின் முடிவில், "ஆகமவாக்யேந" என்றதற்குச் |சிவாகமவாக்கியங்களால் என்றுள்ளபடி பொருள்கொள்ளாமல், சிவாகமங்களை ஒதுக்கித்தள்ளுங் கருத்தினால், ஆகமம் என்னுஞ் சொற்குச் சாஸ்திரம் என்னும் பொருள் கொள்ளலாமாதலால் சாஸ்திரவிதிப்படி புஷ்பம் எடுத்தன

சென்று பொருள்கொண்டு தம்முள்ளே மகிழ்ந்து தொண்டர், சிவாகம விதிப்படி என்று கூறியது தவறென்று கருதியே ஷெடி சுலோகார்த் தங்களைக் கவனிக்கவில்லை என்று எழுதினர் போலும். அதுவே காரிய தரிசிகளின் கருத்தானால், அவர்கள், தங்களுக்குச் சிவாகமங்களில் விசேஷ அபிமானமுண்டென்று விமர்ஷத்தில் வெளிக்காட்டியது, ஆகமாபிமானிகளும் தங்களை விரும்பியடுத்தற்கன்றி உண்மையாகுமா? சிவாகமங்களில் உள்ளபடி அபிமானமிருந்தால், ஆகமம் என்ற சொல்லுக்கு யாதொரு முட்டுப்பாடுமின்றிச் சிவாகமம் என்றுண்மைப் பொருள் கொள்ளுதலை ஒதுக்கிவிட்டு, அவ்விடத்துக்கும் பொருந்தாமல் பல நூல்களிலும் சென்று வியபிசரிப்பதாகிய சாஸ்திரமென்று சொல்லுவார்களா? எல்லாரும் சிவபக்தர்களாயிருந்தும், ஆகமம் என்னும் சொல்லுக்குச் சிவவாக்காகிய சிவாகமம் என்னும் உண்மைப் பொருளைத் தள்ளிவிட்டு, மற்றைத் தேவர் முனிவர் முதலிய சீவர்கள் வாக்கிலும் செல்லும்படி சாஸ்திரம் என்று கொள்வது சிவபக்திக்குக் குறைவாகுமன்றோ. இக்குறையையும் நோக்கவிடாது தடுத்து நின்றது, சிவாகமங்களைச் சிதம்பர சிவாலய பூஜாதிகளில் நுழையவிடப்படாதென்ற வைராக்கியமன்றி வேறாகுமா? இந்த வைராக்கியத்துடன் சிவாகமங்களை ஒதுக்கும் அவர்களைச் சிவாகம விரோதிகளென்பதா? அவர்கள் விமர்ஷத்திற் காட்டியபடி அபிமானிகளென்பதா? அறிஞர் கூறுவாராக.

அப்படியன்று, ஆகமம் என்ற சொல்லுக்கு வேறு நூல்களிலும் சென்று வியபிசரியாமல், சிவ பரமாப்தனிடம் வந்த வேதம் என்றே பொருள் கொண்டு, வியாக்கிரபாதர் வேதவிதிப்படியே, புஷ்பம் எடுத்தல் முதலியன செய்தனரென்கின்றோமென்பரேல், அவ்விதி விவரம் இன்ன வேதத்திலுள்ளதென்று அவ்வசனங்கள் எடுத்துக்காட்டினாலன்றோ பொருத்தமாகும். சிவாகமங்களிலோ அவ்விதிவசனங்கள் தெளிவாயுள்ளனவே. அதனாற்றான் சிதம்பரமான்மியம் சிவாகம விதிப்படி புஷ்பம் எடுத்தனரென்று தெளியக்கூறியது.

அஃதிருக்கட்டும், ஆகமம் என்னும் சொல் ஆப்தனிடத்திருந்து வந்ததென்னும் பொருள் தருதலால், பரமாப்தனாகிய சிவன்முகத்துவந்த வேதம் என்று பொருள் கொள்வதில் என்ன தவறு என்பரேல், அச்சொல்லளவில் அது பொருந்துமாயினும், தொன்றுதொட்டு வழங்கிவரும் பெருவழக்கத்துக்கும், ஆன்றோராட்சிக்கும் விரோதமேயாம். இனி, வேதம் என்னும் சொல் அறிதற்கருவி என்னும் பொருள்

தருதலாலும் ஆகமமும் அறிதற்கருவியாதலாலும் வேதமென்று வருமிடமெல்லாம் ஆகமமென்றே பொருள் கொள்வதில் என்ன தவறு என்று ஆகமிகளாகிய எம்மவர்கள் கேட்கலாம்; அதுவும் அச் சொல்லளவிற் பொருத்தமாயினும், தொன்றுதொட்ட பெரு வழக்கத்துக்கும் ஆன்றோ ராட்சிக்கும் விரோதமேயாம். ஆதலால் இதனுண்மை ஆய்ந்தமைந்த அறிஞர் கூறுவர். அது யாதென்றால், வேதம் அறிதற்கருவி என்னும் காரணமும், ஆகமம் ஆப்தனிடத்து வந்தது என்னும் காரணமும் உடைமையால் அவ்வேதம் ஆகமமிரண்டும் காரணப் பெயர்களே (யோக நாமங்களே). ஆயினும் வேதம் என்னும் சொல் காரண இடுகுறிப் பெயராய் (யோகரூடி நாமமாய்) இருக்குமுதலிய நான்கு வேதங்களுக்கும், ஆகமம் என்னும் சொல்லும் அப்படியே காரண இடுகுறிப் பெயராய் (யோகரூடி நாமமாய்) காமிகம் முதலிய உஅ-சிவாகமங்களுக்குமே தொன்று தொட்ட பெரு வழக்கமாய் ஆன்றோராட்சியில் நிகழ்கின்றன. இவ் வரம்பில்லையேல் உலகர், வேதத்தை ஆகமமென்றும், ஆகமத்தை வேதமென்றும் வரம்பு கடந்து கூறவும் ஆங்காங்குள்ள விஷயங்களில் மலைவுண்டாகவும் நேருமாதலால், மேற்கூறியபடி வரம்பு செய்து வைத்தது சிவாஞ்ஞையே யாமென்று கூறுதலே யாமென்க.

இதனை, நடேசப் பெருமான் இருக்கு முதலிய வேதங்களை வாளா வேதம் என்றும், ஆகமங்களை, லாகுள காபால வைஷ்ணவாதி ஆகமங்களினும் செல்லாமல் "மதாகமம்" (என்னுடைய ஆகமம்) என்றும் சிதம்பர மான்மியாதிகளில் பல இடங்களில் விளக்குதலாலுங் காணலாம். அவ் விளக்கத்தைச் சிதம்பர மான்மியம், உ0 அத் கூ சுலோகத்தில், "மதாகமேஷு" உக "வேதாந்த நிரதா." உஉ "மதாகபரா:" என்பன வாதிகளால் வேதத்தையும் ஆகமத்தையும் தனித்தனியாகவும், உரு "வேதாகமப்ரஸித்தேஷு" என்று தொடர்பாகவும் கூறும் வாக்கியங்களாற் காணலாம். ஆகவே வேதம் என்னுஞ் சொல் இருக்கு முதலிய நான்கு வேதங்களையும், ஆகமம் என்னுஞ் சொல் காமிகம் முதலிய உஅ சிவாகமங்களையுமே உணர்த்துமன்றி மாறுபடக் கூறுதற்குச் சிறிது மிடந்தராதென்பதே தெளிவாம்.

இத்தகைய சிவாஞ்ஞையையும் கடந்து ஆகமம் என்ற சொல்லுக்கு வேதம் என்று பொருள் கொள்ளும் காரியதரிசிகள், வேதாகமம் என்று தொடர்பாய் வரும் வாக்கியங்களுக்கு வேதமாகிய வேதம் என்று பொருள் கொள்வரோ? வேதகா

மம் என்று வருமிடமெல்லாம் வேதமும் அதன் சாரமாகிய சிவாகமமும் என்று பொருள் கொள்ளுதலே விமற்சபுத்திமான்கள் கொள்கையாம். இவ்வுண்மையை பிர்மஸ்ரீ தெண்டபாணி சுவாமி தீக்ஷிதரவர்களும், நாவல ஸ்கூலில், பாற்கடல் போல்வது வேதம், அதன் சாரமாகிய வெண்ணெய் போல்வது சிவாகமம் என்று வெகுசன சமூகத்தில் பிரசங்கித்து மேலும் பாராட்டுதலாலும் காணலாம். இதனைத், தொண்டர் எழுதிய சிதம்பர சிவாலயப் பத்திரிகையில் வருஷமாசந் தேதிகாட்டி விளக்கியது காரியதரிசிகளுக்குந் தெரிந்ததே. ஒரு சமூகத்தார், தங்களுள்ளே கல்வி யறிவொழுக்கங்களிற் சிறந்தார் கொள்கையை அநுசரித்து நடத்தலே உலக வழக்கம். தீக்ஷித சமூகத்தாருள்ளே கல்வி யறிவொழுக்கங்களிற் சிறந்த ஷை தெண்டபாணி தீக்ஷிதரவர்கள் வேதத்தைக் காட்டிலும் சிவாகமங்களை விசேஷித்துப் பாராட்டிவரும் உத்தமக் கொள்கையை அநுசரியாமல் ஷை காரியதரிசிகள் சிவாகமங்களை ஒதுக்கித்தள்ளுவது முறையாகுமா? அன்றியும், அநாதிதொட்டு நடந்துவரும் சிதம்பர சிவாலய பூசனையை ஒருவர் மாற்றுவது அசாத்தியம் என்ற குறிப்பால் ஷை தெண்டபாணி தீக்ஷிதரவர்களையும் புறக்கணிப்பது என்னகாரணமோ? ஷை பூசனை சிவாகமவிதிப்படி நடத்தும்படி வேண்டிக்கொண்ட தொண்டர், ஷை தெண்டபாணி தீக்ஷிதரவர்களை விசேஷித்துக்கூறிக் கேட்டுக்கொண்டதற்குப் பதிலெழுதிய விமர்ஷத்தில் அப்பூசனையை ஒருவர் மாற்றுவது அசாத்தியம் என்றதில் ஒருவர் என்ற குறிப்பு ஷை தீக்ஷிதரவர்களையே சார்தலால் அவர்களைப் புறக்கணிப்பதாக எழுதியதென்க.

காரியதரிசிகள், ஆகமம் என்ற சொல்லுக்கு வேதம் என்று விபரீதார்த்தங்கொண்டு, தங்கள் மட்டில் வழங்குவதை யாராவது நம்புகின்றார்களா? ஆகமபாடசாலைகளை வேதபாடசாலை என்கின்றார்களா? காரியதரிசிகளாவது விஷமமாகவேனும் அவ்வாறு கூறுகின்றார்களா? ஆகமிகளாகிய எம்மவர்கள் வேதம் என்ற சொல்லுக்கு ஆகமம் என்று பொருள் கொண்டு வேதத்தை ஒதுக்குகின்றார்களா? வேதபாடசாலைகளை ஆகமபாடசாலை என்கின்றார்களா? மேலும் விரிப்பானேன். இதுகாறுங் கூறியபடி நூல்வழக்கமும், ஆய்ந்தமைந்த ஆன்றோர் வழக்கமும் சாமானிய உலகர் வழக்கமும் ஒத்துவழங்கிவரும் இவ்வுண்மையும் நோக்காமல், ஆகமம் என்ற சொல்லுக்கு வேதம் என்றே கொண்டு பிடிவாதம் சாதிப்பரேல், அம்முறைதவறாது வேதாகமம் என்று வருமிடமெல்லாம் வேதமாகிய வேதம்

என்றே கொள்ளவேண்டும். அது பொருந்தவில்லையே என்று
முட்டுப்பட்டு அதனை மாற்றி வேதமாகிய சாஸ்திரம் என்கின்
றார்கள். இதனால் அவர்கள் கொள்கை ஒரு நிலைப்படாமல் சம
யம் நோக்கி மாறுபடுதலை அறிஞர் காண்பாராக.

அப்படியன்று, அந்தந்த இடம் நோக்கிப் பொருள் கொள்
கின்றோமென்பரேல் அதுமுறையே. அம்முறையில், சிதம்பர
மான்மியம் ௧௦. அத். ௫௩. சுலோகத்தில், “வேதைராகமைர
கிலைரபி” என்பதற்கு வேதமும் ஆகமுமாகிய எல்லாமும் என்
றுள்ளபடி பொருள் கொள்வதன்றோ, இடத்துக்குத்தக்க
பொருத்தமாகும். இந்த இடத்திலும் ஆகமத்தை ஒதுக்கி
விட்டு வேதமும் சாஸ்திரமுமாகிய எல்லாமும் என்று கொள்ள
முடியுமா? அவர்கள் ஆகமத்துவேஷத்தால் பொருந்தாப்
பொருள் கொள்வன ஒவ்வொன்றும் எடுத்துக்காட்டில் விரியும்.
இம்மட்டிலேயே அவர்கள் சிவாகமங்களைச் சிதம்பரசிவாலய
பூஜாதிகளிற் புகுதவிடப்படாதென்றே ஆகமம் என்று வருமிட
மெல்லாம் விரோதமாக வேதம் சாஸ்திரமென்று கொள்கின்ற
னரென்பதும், சிவாலய பூஜாதிகளுக்கு இன்றியமையாத சிவா
கமங்களை எவ்விதத்தினும் விலக்கமுடியாதென்பதும், வியாக்
கிரபாதர், பதஞ்சலிபகவான், அவ்விருவரை அடுத்து அவர்
நோக்கப்படியே நடந்துவந்த உத்தமர்களாகிய மூவாயிரமுனி
வர் யாவரும் சிரமேற்கொண்டு அநுட்டித்துவந்த நூல்கள்
வேதமும் சிவாகமமுமே என்பதும், இதனையே சிதம்பரமான்
மியாதிநூல்கள் செவ்வே விளக்குகின்றதென்பதும், இவை
முதலிய உண்மைகளை ஒருபக்கங் கோடாது நடுநிலை நிற்கும்
விமற்சாபுத்திமான்கள் உள்ளபடி தெரிந்துண்மைகூறுவர். காரி
யதரிசிகள் தங்களுக்குச் சிவாகமங்களில் விசேஷ அபிமான
முண்டென்றமட்டில்லமையாமல், அவ்வாகமங்கூறும் சிவதீக்ஷாதி
களை அநுட்டிக்கவேண்டியது அநாவசியமென்று கூறியதனா
லேயே, அவ்வபிமானம் சிறிதுமின்றிச் சிவாகமங்களை ஒதுக்
கித்தள்ளுகின்றவர்களே என்பது செவ்வே தெளிவாம்.

இவ்வுண்மை நோக்கியே தொண்டர், கர்ஷணாதி விதிகள்
சிவாகமத்திலன்றி வேதத்திலில்லை என்று கூறினர். காரிய
தரிசிகள் அதற்கு எதிராக அவ்விதி வேதத்திலுமுள்ள தென்
கின்றார். அவ்வசனம் எடுத்துக் காட்டினால் அது நன்மணம்
பெறும். அது காட்ட முடியாமல், அவ் விதி சிதம்பர தத்
துவ நிர்ணயம் பார்த்தால் விளங்குமென்கின்றார். இது, கற்
பகக் கனியை நிம்பதருவிற் பார்த்தால் விளங்குமென்பது
போலுமென்க. ஷஷ்டி நிர்ணயமென்னும் புதுநூல், ஷஷ்டி
தீக்ஷிதர்களிலொருவர், சில காலங்களுக்கு முன், அதற்கு முன்

பன்னெடுங் காலங்களாக நடந்து வந்த சிதம்பர சிவாலய
சிவாகமவிதிப் பூசனையை மாற்றுதற்காகவே சிவாகமத்துவேஷி
யாய்ப் புதிதாகக் கற்பித்த நூலையாம். இவ் வுண்மையை
அந்நூல் செய்த அத்தீக்ஷிதரே ஷை நூல் தொடங்கும்போதே
அதன் முதலில் (சில ஆகமிகள் நியாய விரோதமாக, பிரமாண
நூல்களெலாவற்றிற்கும் சிரசாயுள்ள வேதத்தைக் காட்டிலும்
சிவாகமங்களுக்குப் பிராமண வல்லபமுண்டென்றும், நடேசப்
பெருமானுக்கும் அவரைப் பூசிக்கின்றவர்களுக்கும் சிவாகம
சம்பந்த முண்டென்றும் கூறுகின்றார்கள். அதனை மறுத்தற்
கே சிதம்பர தத்துவ நிர்ணயமென்னு மிந் நூல் நம்மால்செய்
யப்பட்டது) என்றெழுதியிருத்தலாலும் நேரே காணலாம்.
காரியதரிசிகள் வேத வசனங்காட்ட வகையில்லாமல், (நயமற்ற)
நிர்ணய நூலில் கர்ஷணாதி விதி பார்க்கும்படி எழுதியத
னாலேயே அவ்விதி வேதத்தில் இல்லை என்பது தெளிவாம்.
அவ் விதிகள் விவரமாக கூறும் சிவாகமங்களை ஒதுக்கிய அத்
தீக்ஷிதர் சிதம்பர சிவாலய பூசனைக்கு வேறு கெதியின்மை
நோக்கி, ஷை விதிக் கிரமங்களைச் சிவாகமத்திருந்து எடுத்து
நிர்ணய நூலில் வைத்து இவ் விதிகள் வேதத்துள்ளன
வென்று எழுதியிருத்தலாற்றான் அந்நூலைப் பார்க்கும்படி
கூறினர்போலும். சிவாகமங்களை எவ்விடத்தும் ஒதுக்குதலையே
மேற்கொண்டு மாறுபட்டு நிற்றலால், அத் தீக்ஷிதர், சிவ
முகத்து வந்த சிவாகமங்களை நடேசர்க்கும் பூசகர்க்கும் சம்
பந்தமில்லை என்பது விரோதமன்றோ என்பது நோக்காமல்
மனம் போனபடி எழுதி வைத்தனர்.

சிவமுகத்து வந்த சிவாகம சம்பந்தம் நடேச சிவனுக்
குண்டென்று சில ஆகமிகள் கூறுகின்றார்களாம்; பலர் கூற
வில்லையாம். சிலர் கூறுவதும் அநியாயமாம். அதனை அத்
தீக்ஷிதர் மறுப்பது தான் நியாயமாம். ஆ! ஆ!! இந்த நியா
யம் எந்த லோகத்திருந்து அவர்க்கு வந்ததோ? இருக்கட்டும்.
பாற்கடல் போன்ற வேதத்தைக் காட்டிலும் வெண்ணெய்
போன்ற சிவாகமங்களே அதி விசேட நூலென்று அத் தீக்ஷி
தர் வழி வந்த தெண்டபாணி தீக்ஷிதரவர்கள் கூறியதும் அநி
யாயந்தானோ? சிவாகமங்கள், வேதத்திலும் விசேட நூலென்று
உவமான முகமாக விளக்கிய ஷை தீக்ஷிதரவர்களை, சிவாக
மங்களை மறுத்தற்கென்றே எழுதிய ஷை நிர்ணய நூலை அச்
சிட்டு வெளிப்படுத்திய கருத்தென்னையோ? உள்ளக் கருத்தை
வள்ளலறிவர். வேதத்திலும் விசேட நூல் சிவாகமம் என்று
ஷை தீக்ஷிதரவர்கள் கூறியது உண்மையன்று; நாவல ஸ்கூல்
சைவப்பிரகாச வித்தியாசாலை யாதலாலும் அங்குக் கூடியிருந்

தார் சைவாபிமானிக ளாதலானும் அவர்கள் தம்மையும் அபி மானிக்கக் கூறியதேயா மென்பரேல் அது அவர்கள் தகுதிக் குப் பொருத்தமன்றாதலால் ஒப்பத் தக்கதன்று.

கர்ஷணாதி விதிகள் வேதத்திலு முள்ளனவென்ற காரிய தரிசிகள், ஷெ௸ விபரங்களும் அவர்கள் பூசித்துவரும் நடேசர் முதலிய மூர்த்திகள் பரிவார மூர்த்திகளின் இலக்கணங்களும் ஷெ௸ தியான சுலோகங்களும் மேலும் இன்றியமையாத விதிக் கிரமங்கள் எல்லாமும் அவ் வேதத்திலிருந்து எடுத்துக் காட் டினாலன்றோ, சிதம்பர சிவாலய பூசனைக்கு வேதம் விதி விரிவா யிருத்தலால் எங்களுக்குச் சிவாகமானுட்டானம் அநாவசியம் என்றது ஒருவாறு பொருந்தும். "ஸ்வர்க்ககாமோ சோதிஷ் டோமம்யசேத்" என்பது முதலிய வாக்கியங்களால் பல யாகங்கள் செய்யும்படி விதித்த வேதம் அவ் விதி விவரம் கூறியதுண்டா? கற்ப சூத்திராதிகளினாலன்றோ தெரிந்தன்றோ அவ் யாகங்கள் செய்கின்றார்கள். அதுபோல சிவ பூஜாதிகள் செய்கவென்று விதித்த வேதம் அவ்விதி விவரங் கூறிய துண்டா? சிவாகமங்களினாலன்றோ விரிவு தெரிந்து செய்கின் றார்கள். தான் விதித்த யாகாதிகளுக்கே விதிவிவரங் காணாது மேற்செல்லும் வேதத்தில் கர்ஷணாதி விதி விவரம் எங்குக் கண்டெடுத்துக் காட்டுவரோ? அஃதிருக்கட்டும்.

சிதம்பரதத்துவ நிர்ணயம் என்றால் சிவபத்தர்கள் யாவ ரும் விரும்புவார்கள். புத்தகம் விலையாகும் என்று கருதியே சிதம்பரதத்துவமுதலியவெல்லாம் உள்ளபடிகூறும் சிவாகமங் களை மறுத்தற்கே எழுதிய அந்நூற்கு அப்பெயர் வைத்தனர் போலும். அத்தீக்ஷிதர், சிவனுக்குப் பரிபூரண சம்பந்தமான சிவாகமங்களை நடேசசிவசம்பந்தமில்லாதன வென்றே ஒதுக் கித்தள்ளவே எழுதிய மாறுபட்ட அந்நூலைச் சிவவாக்காகிய வேதசிவாகமாதி திவ்விய நூல்கள் போல்வதோர் பிரமாண நூலாக யாராவது ஒப்புக்கொள்வார்களா? அவர், அதற் கென்றே அருந்தவம்புரியினும் அவ்வருள் வடிவாகிய ஆகமங் களை ஒதுக்கமுடியுமா? அவர் அபிமானிக்கின்ற வேதமே, ஸர்வாகமமய : சிவ : என்று சிவாகமங்களைப் பேணுகின்றது. இங்கும் ஆகமம் என்ற சொல்லுக்குச் சாஸ்திரம் என்று கூற முடியாது. ஏனென்றால் சிவபிரான் திருவுருவில் இன்ன அவய வம் இன்ன ஆகமமாகுமென்று அவ்வேதபாஷியம் போலச் சிவபிரானருளிய சிவாகமங்கள் விளக்குதலாலென்க. இனி, வியாசவாக்காகிய ஆலாஸ்ஸிய மான்மியம், சதா சிவமுகங்கள் ஐந்தனுள்ளே மேலுள்ள அநுக்கிரகமுகமாகிய ஈசானமுகத்

தில் காமிகாதி ௨௮ சிவாகமங்களும், அம்முகத்தின் கீழுள்ள திரோபவ சம்ஹார ஸ்திதி சிருஷ்டிமுகங்களாகிய தத்புருஷ அகோர வாமதேவ ஸத்தியோஜாதமுகங்கள் நான்கினின்று இருக்குயசுர்ஸாமம் அதர்வணமாகிய நான்கு வேதங்களும் வந்தனவென்று கூறுகின்றது. இதனில் வேதங்களைக்காட்டிலும் சிவாகமங்களுக்கு உயர்வுகூறி யிருப்பதை அத்தீக்ஷிதரால் மறுக்கமுடியுமா? ஆகமிகளாகிய எம்மவர்கள் சிவவாக்கிய வேதசிவாகமங்களை மேற்கொண்டு, இதுவே சிவசம்மதமென்றுள்ளபடி தெரிந்து அவ்விரு நெறிகளையும் அநுட்டித்து வாழ்கின்றது தெரிந்தும், அத்தீக்ஷிதர் முதலியோர் சிவவாக்கிரண்டில் அதிவிசேஷமுள்ள ஒன்றைத் தள்ளி மற்றொன்றை மாத்திரம் மேற்கொண்டு, அந்தோ! சிவபிரான் முனிவுக்கே ஆளாவதென்னையோ? நூலின்பெயர் சிதம்பரதத்துவ நிர்ணயமாம். அதனிலுள்ள விஷயங்களோ நடேசர்க்கும் பூஜகர்க்கும் சிவாகம சம்பந்தமில்லை என்று தள்ளுதலாம். இவ்விஷயத்துக்கும் அப்பெயர்க்கும் என்ன சம்பந்தமுளதோ? வேதசிவாகமங்கள் சிவவாக்கென்பதை உள்ளபடியறிந்த பெரியார் ௸ நிர்ணய நூலை ஒரு பொருளாக்கொள்ளார்களாதலால் அதைப்பற்றி மேலும் விரிப்பானேன்; அமைக.

காரியதரிசிகள், அநாதிதொட்டு நடந்துவரும் சிதம்பர சிவாலய பூசனை என்கின்றார். சிதம்பரத்தில் நடேசப்பெருமான் வெளிவந்து நடனஞ்செய்ததற்கே ஆதிகாலம் ஏற்படும்போது, அப்பூசனைக்கு அநாதி கூறியது எந்த ஆதாரம் கொண்டோ? வியாக்கிரபாதர்க்கும் பதஞ்சலி பகவானுக்குந் இன்ன தினத்தில் நடனம் தெரிசிப்பிக்கின்றோமென்று அந்நடேசப்பெருமானே கூறியது முதலிய வாக்கியங்களால் அந்நடனத்துக்கு ஆதிகாலம் வெளிப்படையாகத் தெரிகின்றது. வருஷந்தோறும் தை மாசத்தில் குருபூசத்தில் விசேஷ பூசனை நடத்தி வருகிற வழக்கமும் விளக்குகின்றது. இவ் வுண்மையும் நோக்காமல் அப் பூசனைக்கும் அநாதி கூறியது, தொண்டர், சிதம்பர சிவாலய பூசனை சிவாகம விதிப்படியே ஆதிதொட்டு நடந்து வந்ததென்று கூறியதற்கு எதிர்மொழியன்றி வேறாகுமா? தொண்டர் சிவாகமபூசனை ஆதி என்றார். நாம் வைதிகபூசனை அநாதி என்று எதிர் கூறி அதனைத் தள்ளிவிட்டோம் என்று மகிழும் காரியதரிசிகள், தொண்டர் பிரமாண வாக்கியம் பற்பல காட்டியதற்கு எதிராக ஒரு பிரமாணமாவது காட்டினரா? மனம்போனபடியே பின் செல்லும்போது வழி குழி நோக்க வருமா? சிவாகமங்களை ஒதுக்கித் தள்ளுதலொன்றிலேயே மனஞ்சென்றுவிட்ட படியால், ஆதி என்ற

தற்கு எதிராக ஒரு பிரமாணமுமின்றி அநாதி என்று கூறிய வெம்புமொழி எவராவது நம்புமொழியாகுமா?

பஞ்சகிருத்திய நடனம் அநாதியன்றோ என்பரேல், மேற் கூறிவந்த விஷயம் அந் நடனத்தைக் குறித்ததன்று. நடே சப் பெருமான் என்றுமுள்ள தமது திரு நடனத்தைத் தைப் பூசத்தில் வெளிப்படத் தெரிசிப்பிக்கின்றோமென் றருளிய படி காட்டியருள, அன்று முதல் அவ் விருவர் பூசித்துவந்த பூசனையைக் குறித்ததே யாதலால் அக் கேள்வி பொருந்தா தென்க. சிவபிரானுக்கு அதிப் பிரீதிகரமானதும் தமது முன்னையோர் மேற்கொண்டு வந்ததுமாகிய சிவாகமங்களைப் பின்னையோர் ஒரே பிடிவாதமாக ஒதுக்கித்தள்ளி மாறுபட்டு நிற்பது, சிவாநுக்கிரகத்துக்கு ஏதுவாமோ என்பதைச், சிவாகமத்துவேஷமின்றி நின்று யோசிக்கும்போது உண்மை விளக்கமாம். முன்னையோராகிய மூவாயிரவரும், அவர்க்கும் முன்னையோராகிய இரு முனிவர்களும், சிதம்பர சிவாலய பூசனை சிவாகம விதிப்படியே நடத்தி வந்தார்களென்றதற்குத், தொண்டர் சிதம்பர மான்மிய வசனங்கள் பற்பல காட்டியிருப் பவும், காரியதரிசிகள் ஒரு பிரமாணமுங் காட்டாமல் அநாதி தொட்டு வைதிக பூசனைதான் நடந்து வருகிறதென்று கூறியது சிறிதும் பொருந்தாதென்பதைச் சிறுவருந் தெரிவாராதலால் இம்மட்டிலமைக.

காரியதரிசிகள், இத்தனை கஷ்டங்களுக்கு இடமில்லாமல் முதலிலேயே சிதம்பர சிவாலய முழுதும் எங்கள் சொந்தக் கிருகம்போல்வதே. ஷை பூசகர்களும் நாங்களே. எங்க ளிஷ்டப்படி வைதிக பூசனைதான் செய்வோம். தொண்டர், மேலும் பிரயாசைப்பட வேண்டாமென்று தெரிவித்துவிட் டால், ஒரு விவாதமுமில்லை. அவர்களும் பொருந்தாதன பல வற்றை எழுதிப் பொருத்துதற்குப் பிரயாசைப்படவேண்டா. ஒரே சொல்லில் அமைந்துவிடும். ஆகமிகள் முதலிய எல்லா ரும் இதுவும் திருவருள் சம்மதமோவென்று ஒதுங்குவதன்றி வேறு யாது செய்யலாம்.

சிதம்பரசிவாலயத்தைச் சொந்தக்கிருகமாக அபிமானித்த லாற்றான், அவர்களிற் சிலர், அக்கோயிலுள்ளிருந்து புகையிலை தாம்பூலாதி நுகர்தல், கோபுரவாயில் முதலிய ஒதுக்கங்களில் அவ்வெச்சிலுமிழ்தல், பிராகாராதிகளிலும் சிவகெங்கைக்கரை நிருதிமூலை விநாயகாலயமதில் மறைவிலும் ராஜசபை மறைவிட ங்களிலும் மூத்திராதிமோசித்தல் முதலியன செய்கின்றனர் போலும். பல பெரியார்கள், ஆசாரபுநிதர்களாய் அத்தியந்த

பக்திசிரத்தையுடன் நித்திய நியமார்ச்சனுதிகள் செய்து வருதல் தெரிந்தும் அவர்கள் அவ்வநாசாரங்கள் செய்வது நியாயமாகுமா? சொந்தக்காரரே இவ்வாறு செய்தலால், வருகின்ற சாமானிய சனங்களும் பல்லுத்தேய்த்தல், மலசலமோசித்தல், தம்பலாதிகள் எங்கும் உமிழ்தல் முதலியன செய்கின்றனர். இக்கொடுமையால் கக்குசு எடுக்கும் கூலியாள் நியமிக்கும்படி நேர்ந்துவிட்டது. தூரதேசத்துள்ளாரும் சிதம்பரமகிமை தெரிந்து வருகின்ற திருக்கோயிலில் இச்சிவத்துரோக அநாசாரம் பெருகுவது தெரிந்தும் அப்பொதுவார் பராமுகராயிருப்பதென்னையோ? தங்களில் எத்தனையோ அரிய விஷயங்களை வெகு கண்டிப்பாய் நியமித்து நடத்தும் வலியினராதலால், கோயிலில் தினந்தோறும் நடக்கின்ற அப்பாதகச் செயல்களை நீக்கி அங்கங்கும் காவல் நியமித்து எல்லா இடங்களும் பரிசுத்தமாய் விளங்கச்செய்யும்படி கேட்டுக்கொண்டு, ஸ்ரீ சிவகாமசுந்தரி சமேத நடேசப்பெருமான் திருவடிகளைப் பணிந்து பிரார்த்திக்கின்றேன். சுபம்.



"சிவநேசன்" அச்சியந்திரசாலை பலவான்குடி.